[8th August 1960

வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள். அப்படி ஈடுபட்டிருக்கிறவர்கள் வேலை இல்லாமல் இருந்தால் அவர்களுக்கு வேலை கொடுக்க ஒரு திட்டத்தை அமைக்க இந்த சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is also a suggestion. வேலை இல்லாதவர்களுக்குத்தான் இப்பொழுது வேலை கொடுக்கிறோம்.

**SRI V. SUBBIAH:** அரசியல் தியாகிகளில் உண்மையிலேயே தியாகிகள் பலர் வேலைக்கு மனுச் செய்து இருந்தும் அவர்களுக்கு வேலை கிடைக்காத காரணம் என்ன ? அவர்களுக்குக் கொடுக்க காலி ஏற்படவில்லையா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** பலர் விண்ணப்பம் செய்கிறார்கள். ஒரு சிலருக்குத்தான் வேலை கொடுக்க முடியும். யார் நன்றாக வேலை செய்வார்கள் என்று பார்த்து தேர்ந்து எடுக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த அவசியம் ஏற்படுகிறது.

*Maintenance of roads.*

* 11. Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா வைகை அணைக்கட்டிலிருந்து ஆண்டிப்பட்டி செல்லும் P.W.D. ரோடையும், சின்ன மதுரையிலிருந்து செல்லும் ஹைவேஸ் எஸ்டேட் ரோடையும் சர்க்கார் பராமரிப்பில் எடுத்துக்கொள்ள உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : No Sir. But there is a proposal to transfer the road from Vaigai Anicut to Andipatti from the Public Works Department to the Madurai District Board.

SRI N. R. THIAGARAJAN : சின்னமநல்லூரில் இருந்து செல்லும் ஹைவேஸ் ரோடு முக்கியமானதாகையால் அதையும் எடுத்துக்கொள்ளவேண்டும். மேலும் வைகை அணைக்கட்டு ரோடில் வருஷத்திற்கு ஒருநாள் இரண்டுநாள் போவதற்குத் தடை விதிக்கப்படுகிறதே, அதையும் நீக்குவதற்கு முன் வருவார்களா ?

**THE HON. SRI P. KAKKAN :** இப்போதும் தடை இருப்பதாகத் தெரியவில்லை. கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் முழு விவரமும் சேகரித்துப் பதில் அளிக்கிறேன்.

*Aid to schools adopting Montessori system*

*** 12 Q.—SRI A. VEDARATHNAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மாண்டிச்சேரி முறையில் இம் மாநிலத்தில் நடைபெறும் ஒவ்வொரு பள்ளிக்கும் அரசாங்கம் அளித்துவரும் உதவி என்ன?

8th August 1960]

(ஆ) மாண்டிச்சோரி முறையில் நடைபெறும் பள்ளிகளில் எத்தனை வகுப்புகள் வரையில் நடத்திவருகிறார்கள் ?

(இ) அந்த முறையில் கல்வி போதிக்கும் ஆசிரியர்களுக்கு போதனை முறைப் பயிற்சிப் பள்ளிகள் இம் மாநிலத்தில் இருக்கிறதா ?

(ஈ) அப்படியானால், எங்கே ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) These schools are treated as schools for special education for purposes of aid. The grant payable in each case is fixed according to the circumstances of the case.

(*b*) There are no fixed classes or standards.

(*c*) Yes, Sir.

(*d*) Arundale Training Centre.

SRI A. VEDARATHNAM : இந்தப் பயிற்சிப் பள்ளியில் பயிற்சி பெறுவதற்காகச் செல்கிற ஆசிரியர்களுக்கு ஜெனரல் க்வாலிபிகேஷன் என்ன இருக்கவேண்டும் ? அந்த மாண்டிசோரி முறையில் நடைபெறுகிற பள்ளியில் மாணவர்கள் எத்தனை வயதில் இருந்து அனுமதிக்கப்படுகிறார்கள் ? எத்தனை ஆண்டு அவர்களுக்கு அங்கே கல்வி போதிக்கப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I want notice.

*Andimadam-Kodukkur road*

* 13 *Q*.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) when the change of alignment of the Andimadam-Kodukkur road in Tiruchirappalli district was sanctioned by the Government;

(*b*) the reasons for the delay in taking up the formation of the road so far; and

(*c*) the steps taken to overcome the difficulties?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) In April 1959.

(*b*) A portion of the road passes through forest area and for want of permission from the Forest department, the work could not be completed till now.

(*c*) The Divisional Engineer (Highways), Tiruchirappalli, has been instructed to compete the remaining work expeditiously.

*Scholarships to students*

* 14 *Q*.—SRI A. GOVINDASAMY (on behalf of Sri S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60-ம் ஆண்டில் (1) மத்திய சர்க்கார், (2) மாநில சர்க்கார் ஸ்காலர்ஷிப்புக்காக வந்த மனுக்கள் எத்தனை ?